Registered No. M. 2330.



# சித்தாந்தம்

மலர் ௭ | பவ ஆண்டு ஆனித் திங்கள் 1934௵ ஜூன்௴ | இதழ் ௬

## முப்பந்தொட்டியுலா

காப்பு

சொல்லுமுப்பந் தொட்டிவரு சோமநா தீசுரன்மே
னல்ல வுலாவை நவிலுதற்கு—வெல்லுந்
திருத்தன் மருகன் செயங்கொள்செல் வப்பிள்ளை
யொருத்தன் முகனமக்கே யுண்டு.

நூல்

தலவரலாறு

1 சீர்பூத்த தண்பிறையுந் தீம்புனன்மந் தாகினியுந்
தார்பூத்த செஞ்சடையிற் றுங்கினோ—னேர்பூத்துத்
தோன்றுமதி வெம்பருதி சொற்றிகழுஞ் செய்யவன்னி
மூன்றுகோ வான முகத்தினான்—கான்றிகழுங்
கந்தரஞ்சொல் வட்டக் கமடமருப் பென்பிதழி
வந்திலங்கு கின்ற வரைமார்பன்—சந்ததமு
நீறணிந்த மெய்ய னெரித்தநர சிங்கவுரி
கூறு மிதமான கோவணத்த—னாறுமலர்ப்
5 பாதனுல கெல்லாம் பரவ வரிதான
நாத னெவரிடத்து நண்ணுவோ—னாதிநாள்

வந்தசிந்து தேசத்தின் மாமண்ட லாதிபனுஞ் [கள்
சுந்தரஞ்சேர் மங்கையினுஞ் சொற்சுதனுக்—தந்திரங்
மன்னுமதி யூகியுமாய் வாழ்ந்திருக்கு நாளதனிற்
பன்னுஞ் சிவதலங்கள் பார்க்கவென—வுன்னுகையி
லாகாச வாணிசொல்வா னானதொண்டை நாடதனில்
வாகா மலையாறு மாமுனிவர்—யோகநிலை
செய்யுஞ் சிவதலமுஞ் சித்தங் களிக்கவுண்
டையமறப் போமென்ன வாங்கவனு—மெய்யினுளம்
10 வெய்யில்மெழு காயுருகி மேவுமனை செய்தளங்கள்
செய்யு மகிழ்ச்சியுடன் செல்லுமப்போ—மையகன்ற
கொய்யுளைப்பாய் மாவிரண்டு கொண்டதிவே கங்கொளவே
வெய்யதளஞ் சேய்மனைவி விட்டேக—வையமில்லாத்
தென்பூமி நந்திமலை தீனரட்சி பாலாறு
மன்னு மிருபாலு மாமுனிவ—ருன்னுலிங்கப்
பூசை செயுமிடங்கள் பொற்றொண்டை நன்னாடு
காசி தனிலதிக காஞ்சிபுர—மீசுரியார்
மெய்த்தவமாய்ச் செய்யுமிட மேல்பாலாம் பூங்கோடு
வைத்ததெண்ட காரணிய மாதீர்த்தஞ்—சித்தமது
15 ஒன்றுஞ் சிவானந்தர் யோகஞ் செயுமிடமும் [முனி
வென்றிபெற வந்துகண்ட வேளையினிற்—குன்றின்
பாதம் பணியுமப்போ பார்த்திபனே யிங்ஙன்வந்த
தேதுமனத் துள்ள தியம்புமென—வாதரவா
யிந்த வனமு மினிதிருந்த மாதவத்தோர்
பந்தமறச் சொன்ன பதவியல்புஞ்—சிந்தைமுற்ற
முக்கணன்றுள் பூசை முறையு முறையுமென
வக்கண் சிவானந்த வம்முனிவன்—மிக்கவே
யேதமறக் கேட்பா யிதுதெண்ட காரணிய
மாதவமி ராமர்செய வந்தவிட—மோது

20 முனிவ ரிரவிமதி மூதறிவாந் தேவ
ரினியசிவ பூசைசெய வெண்ணிக்—கனிவுடனே
வந்தவிடம் வேதமா வாக்யதத்து வ[ம்]மசியா
மிந்தப் பொருள்வசிட்ட ரிராமருக்—கந்தமுற
முப்பதமு மேபிரித்து முன்னா முபதேசஞ்
செப்பியது மிந்தவிடஞ் சிந்தைவைப்பா—யிப்படியெந்
நாவா லுனக்கருள்வோ நாமுரைத்த சொற்படியே
யேவற் பணிவிடைசெய் யென்னவே—யாவலுடன்
செப்பு மெனக்காம தேனுவைவிட் டேயிதனைத்
தப்பறவே மேய்த்திங்ஙன் சாருமென—வொப்பியே
25 செல்லுமப்போ தேகாம தேனுவின்பின் னேபோந்து
வல்லநதி நீர்குடித்த வண்மைகண்டு—தில்லாமற்
போகையிலே வெம்புலியும் போய்ப்பிடிக்கக் கூப்பிட்ட
வோகையிலாச் சத்தத்தா லுற்றவில்லுந்—தாகமற
மந்திரவா ளுங்கணையும் வன்மமறக் கொண்டுசெல்ல
வந்தப் புலியுரைத்த தாச்சரிய—நிந்தைமன்னா
காட்டிலிரை யில்லாமற் கண்கலங்கி வெம்பசியாற்
கூட்டுமிரை கொள்ளாமற் கொல்லவந்தாய்—நாட்டு
மனுநீதி தேர்ந்தமன்னா வார்த்தைசொல்லக் கேணீ
நணியபசி தீரவருள் நாட்டா—யெனவுரைக்க
30 மாதவத்தோ னவை வருத்தாமற் றன்னையிப்போ
கோதிக்கோ ளென்னவவன் கூறியிடு—நீதியினா
லிந்தநெறி கொண்டமன்னா வென்ற னுடல்குளிர்ந்தேன்
சந்ததமு மீசனே தான்காப்பன்—சுந்தரமாய்
மன்னாநீ யும்பசுவு மாமுனிவன் றன்னிடத்திற்
கொன்னேநில் லாமற் குறுகுவா—யென்னவே
போகாம லாங்கவனும் போர்வாளா லோவிடுத்தாய்
வாகாய்ப் படைவிடுத்தேன் வன்புலியே—பாகாக
நின்பசியைத் தீர்த்திடென நேயமுட னப்புலியு [த
மன்பா யமர்ந்துபின்னு மாங்கதுதான்—பொன்பொதிந்

35 தாரார் கடுக்கைச் சடைச்சோம நாதரெனச்
சோரா விழியின்முனந் தோன்றவே—பேரா
யிரமுடைய வள்ளலே யீசமகா தேவ
வரகர [1]வென் றேசொல் லமையம்—விரைவுடனே
கோமுனிவன் முன்னைக் கூறுதிரங் கண்டேங்கி
மாமுனிவன் சீறுமுன்ன மாதேவன்—சோமனையே
செஞ்சடையில் வைத்த தெரிசனங்கண் டேயுருகி
நெஞ்ச மகிழ்ந்துமன்னா நீகேளாய்—விஞ்சுமுன்னாள்
சோமனார் பூசைகொண்ட சோமநா தக்கடவு
டாமிருந்த வெல்லையென்று சார்ந்ததிருக்—காமியார்
40 மேவு தவஞ்செய்யும் வேளையினி னீயும்வந்து
பூவிலைகொண் டேயவரைப் பூசித்தே—யாவலுடன்
மன்னுகின்ற வேளையண்ணல் மாப்புலிபோ லேயுனது
முன்னம்வரக் கண்டேங்கி மூண்டெழுந்து—பன்னு
மழைப்புயல் கொண்டோங்கு மாமேனி யாங்கே
யழைக்கத் தவமிருந்த வைய—னுழைக்கரனைச்
சிந்தைதனில் வைத்திருந்தார் சீறும் புலியையண்ணல்
வந்ததெனக் கட்டியொன்று மாறதனைப்—பந்தமறக்
கண்டேங்கி வந்து கதறும் பசுப்போல
வண்டர்பிரா னைத்துதித்த [வப்]போது—விண்ட
45 தவக்குறையா லவ்வுட ருன்விட்டோர் வேந்தன்
பவப்பிணிதீர்க் கும்மகவாய்ப் பாரி—னுவப்புடனே
வந்தாய் தவக்குறையை மாற்றவிப்போ விவ்விடத்தைச்
சிந்தைமகிழ்ந் தேகண்டாய் தேறுமன்னா—வந்தவிட
மாமுப்ப தப்புரமா மன்னுமுப்பந் தொட்டியாஞ்
சோமநா தப்புரமாஞ் சொல்லிலின்ன—நாமமுமெய்ஞ்
ஞானயோ கர்சித்தி நன்னகர மென்றுமுன்னோர்
மானமுடன் சொல்லவந்த மாநகர—மானவதி

(பிரதி)—[1]வென்றுசொ லவ்வமையம்.

லெந்நாளு மன்பா யிருந்துசிவ புண்ணியத்தைப்
பன்னாளுஞ் செய்திடென்று பாலித்தா—ரந்நாளில்
முன்னம் பிரிந்த முயங்குமங்கை மின்னாளு
மன்னுமண்ட லாபுருட மாமகவு—முன்னரிய
மந்திரியாம் யூகி வரனுடனே நால்வகையாந்
தந்திரியோ டேயத் தளங்களெலாம்—வந்திடவே
மைந்தனுக்குப் பட்ட மகிழுடனே தான்றரித்துச்
சிந்துதே சத்திற் செலவிடுத்து—நந்தலிலா
தீட்டுபொருள் வந்ததனு னேழுநிலைக் கோபுரமும்
வாட்டமிலா வாயிரக்கால் மண்டபமு—நீட்டுங்
கொடிமதிலுஞ் சுற்றிருக்குங் கோவிலுமுண் டாக்கி
நெடியதெரு வீதி நெருங்கக்—குடிகடமில்
வேதியர்தம் வீதிகளும் வேந்தர்செறி வீதிகளு
நீதி நெறிவசியர் நீள்தெருவு[ம்]—போதரிய
வேளாளர் வீதிகளு மேவும் பலகுடியு
நாளுமிக வோங்கவே நாட்டிவைத்துக்—கோளறவே
மேடத் திருநாள் விளங்கச்செய் தானந்தார்
சூடுஞ் சிவானந்தர் சொற்படியே—நாடுமா
னங்க ணிருந்தே வனேகவுப சாரமுடன் [முஞ்
மங்களமாய்ப் பூசைகொண்ட மாதேவன்—கொங்குவிம்

## மூர்த்தியின் பெருமை

செங்கமல மானபதன் றில்லைமூ வாயிரவர்
தங்களிலொன் றாய்வந்த சாம்பசிவ—னிங்கண்
திருநீல கண்டரில்லாள் சேர விளமை
தருநீல கண்டன் றரைமேன்—மருவுங்
கயற்கணியை யீங்குக் கருணேசுரன் தன்பா
லியற்பகையாற் கேபொழியு மின்கார்—நயத்துடனே

யுன்னரிய மாமழையி னுற்று முளைவாரி
யன்னமிட வேயங் கருள்கொடுத்தோன்—பன்னவரு
மெய்ப்பொருணாட் டன்றனது மெய்யான வன்புகண்டு
கைப்பொருள்போன் முத்திநெறி காட்டினோன்—றப்பு
கண்டா லடியவரைக் கண்டித்து மீறும்விறன் [நெறி
முண்டருக்கன் பேகொடுக்கு மூர்த்தியார்—பண்டைநாள்
கோதில்பொருள் செய்மனைவி கோவணநேர் தூக்குமமர்
நீதியார்க் கன்புசெய்து நீதியா—னோதவரு
மெத்திசையோர் போற்று மினிய வெறிபத்தர்
பத்திகண்டு முத்திநிலம் பாலித்தோன்—சித்திரமாய்த்
தோற்றான்பின் னீறணிந்து தோன்றவே னாதியார்
மாற்றானை யீசனென வந்துநின்றோன்—சீற்றமறக்
கற்றோர் புகலவொரு கண்சாத்துங் கண்ணப்பன்
மற்றோர்கண் ணும்பிடுங்கா வாறுசெய்தோ—னுற்ற
கலைச்சிக்கி யுள்வளையக் கண்ட கலையன்
கொலைக்கஞ்சி யேநிமிர்த்த கோமான்—சிலைப்புருவ
வஞ்சியள கந்தவற்கு மானக்கஞ் சாறனார்
பஞ்ச வடிக்கீயநலம் பாலித்தோ—னெஞ்சிப்
படுபொருணாற் றாயனார் பாற்கமரிற் சிந்த
வடுவொலியுங் காட்டவங்கண் வந்தோன்—படிதனிலே
யாயனா ரஞ்சக் கரத்தை யகமகிழ்ந்தே
வேயி னிசைக்க வெளிப்பட்டோன்—றாயருக்கு
நந்தலிலா மாமூர்த்தி நாயனார் தன்முழங்கைச்
சந்தனக்காப் புக்கிழைக்கத் தான்வந்தோன்—கந்தமுள
பூமலரஞ் சக்கரமுப் போதுமுறைத் தேயெடுத்த
மாமுருகன் மாலையினால் வாழ்வளித்தோ—னாமுத்திப்
பாரி னுருத்ர பசுபதியார் சீருத்ரம்
நீரிற் செபிக்கவந்த நீண்முடியோன்—றேருந்

திருநாளைப் போவான் செழுங்கனலுண் மூழ்கி
யொருநாட் கதியளித்த வள்ள—லொருநாடான்
சொல்லுந் திருக்குறிப்புத் தொண்டர் பணிக்குறையாற்
கல்லிற் றலைமோதக் கைபிடித்தோன்—வல்லபிதா
பாதந் தடிந்த பலன்மாலை தீர்த்தப்ர
சாதந்தண் டேசுரற்குத் தந்தபிரான்—றீதகல
வுப்பருக்கு மாமணிக ளுண்டாந் திரைக்கடலி
லப்பருக்குக் கன்மிதக்க வன்புசெய்தோ—னொப்பிலா
மெய்கண்ட சைவநெறி மேவுங் குலச்சிறைக்குக்
கைகண்ட முத்திநெறி காட்டினோன்—செய்பிராண
வாயுவையே தானிறுத்தி வந்தமிழ லைக்குறும்பர்
நேயங்கண் டின்ப நெறியளித்தோன்—றூய
கனிதருமன் பாலேபொற் கற்பு மிகுந்த
புனிதவதிக் கன்புசெயும் புத்தே—ளினிதுடனே
செப்பியவப் பூதியார் சேயைவிடந் தீண்டியுநல் [திரு
லப்பருக்கன் னங்கொடுக்க வங்கண்வந்தோன்—செப்பு
நீலநக்கர் தேவியுமி நீர்தடவி யச்சிலந்தி
யாலுமன்பு செய்ய வருள்கொடுத்தோன்—சீலமிலாத்
தப்புச் சமணர்சொல்லாற் சாயா நமிநந்தி
யப்புவினாற் றீபமிட வாங்குவந்தோன்—செப்பியபெண்
ணாகவென்பைத் தென்மயிலை யம்பதியிற் சம்பந்தர்
பாகனைய பாடலுக்காப் பாவிப்போன்—யோகர்நிலை
கண்டசுந்த ரற்குக் கவிக்காமர் நெல்கொடெனக்
குண்டையூர் நின்று கொடுத்தபிரான்—பண்டைநா
ளாவைபிரட் சிக்க வயற்காயஞ் சேர்ந்தோர்சொன்
மேவுதிரு மந்திரத்தின் மேனின்றோ—னவலர்சொற்
றண்டி யடிக டடாகம்வெட்ட வேசமணர் [நாள்
கண்டடியக் கண்கொடுத்த காட்சியான்—பண்டொரு
சூதாடி மூர்க்கனார் தோற்றுரைக் குத்தியவப்
போதாடி வந்த புனிதனார்—வேதாவோ

டண்டர்புகழ் சோமாசி யாரடியார் தெய்வமென்று
கண்டபொழு தேவந்த கண்ணுதலான்—பண்டைநூல்
சொல்லியநீர் பூவன்னஞ் சோராமற் சாக்கிய[ர்]முக்
கல்லெறிய முத்திநிலை காட்டினோன்—வல்லமையே
வாடாச் சிறப்புலியார் வந்தேற்ப வர்க்கிட்டுக்
கோடா மகமுடிக்கக் கொண்டபிரான்—பாடுஞ்
சிறுத்தொண்டன் சேயான சீராளன் றன்னை
யறுத்திடவே யன்புசெயு மண்ணல்—குறைப்படா
வாதியுலாப் பொன்வண்ணத் தந்தாதி செய்தமன்னன்
காதற் படியே கருணைசெய்தோ—னோதியசீர்
காழிக் கணநாதன் கண்ணுதலோன் கோவிலினி[ழமுடி
தூழியஞ்செய் வார்க்குகந்த வுண்மைகண்டோன்—வா
நாட்டோமென நூலோர் நற்கூத் துவந்துதாள்
சூட்டியர சாளவைத்த சோதியான்—பாட்டுரைத்துப்
பொய்யடிமை யில்லாப் புலவ ரறிவினுக்காய்
மெய்யடிய ரென்றுயர்ந்த வீடளித்தோன்—வையமதி
னுன சடைமுடிக்கா யக்கினியின் மூழ்கவுமே[ஞானமிக
மானபுகழ்ச் சோழன்முன்னம் வந்து நின்றோன்—
முற்றுநர சிங்க முனையர்திரு வாதிரைநாட்
பெற்றதவத் தாலருளைப் பெய்கின்றோ—னத்தின்
மறிகடன்முன் மீனிசன் வார்கழற்கென் றேயங்
கெறியுமதி பத்தருக்கன் பீந்தோன்—சிறியவிடைப்
பொட்டுநுத லார்கரங்கள் போகக் கலிக்கம்பர்
வெட்டும்போ தாண்டு வெளிப்பட்டோ—னிட்ட
விளக்கினி[ன்]ற தீமாய மெய்க்கலிய னார்தங்
களத்தை யரியவந்த கர்த்தன்—வெனுத்துவர
நேசவடி யார்களையே நிந்தித்தார் நாக்கரிந்த
மாசகனுஞ் சத்தியர்முன் வந்த வள்ளல்—பேசியசீ

ரையடிகள் காடவர்கோ னய்ந்துவெண்பா நாடோறுஞ்
செய்யுமுறை கேட்டுமகிழ் சீராளன்—மெய்யே
தரிக்குங் கணம்புலனர் தன்றலையைப் புல்லோ
டெரிக்க வெளிப்பட்ட வீசன்—பெருக்கமுடன்
காரிநா யன்சொற் கவிபாடுந் தொண்டுடனே
சேரும் பணிவிடையுஞ் செய்யவந்தோன்—றீரநெடு
மாறனர் நீறும் வளர்சிவ பத்தி[யுமெய்]
யேறவுஞ்செய் போதுவந்த வேழைபங்க—னீறணிந்து
ஞானமுடன் வாயிலார் நாயனர் நேயமா
மானதபூ சைக்குநிதம் வந்தவள்ள—ருணர்ந்து
சீரியர்க்குத் தானிதமுந் தேடும் பொருள்கொடுத்த
பாரின் முனையடுவார் பால்வந்தோ—னேர்பூவான்
மூக்கிழந்தாள் கையும்விழ மோதுங் கழற்சிங்கற்
கூக்கமுற வீடு முதவினேன்—கோக்கணின்முன்
மூட்டையடி யார்க்கன்ன முட்டாமற் கொண்டதென்று
காட்டு மிடங்கழியார் காணவைத்தோ—னீட்டுபுகழ்
தேக்கு செருத்துணையார் தேவிசெய்த குற்றத்தான்
மூக்கரிந்த போதுவந்த மூர்த்தியார்—நோக்கொன்றும்
பூசை யிருநாளுஞ் செய்த புகழ்த்துணையார்
மாசகலச் சொப்பனத்தில் வந்தவள்ள—றேசுபெறுங்
கோட்புலியீ சர்க்குக் கொடுத்தநெற்கோண் டோருயிரை
வாட்கிரையாக் குங்கணத்தில் வந்தவள்ளல்--தாட்பரனை
சாக்கிரத்துஞ் சொப்பனத்துந் தாநினைந்து நீங்காம [ச்
ஞேக்குபத்த ராய்ப்பணிவார் நோக்கவந்தோன்—சீர்க்கமலப்
பாதம் பணிந்து பரமனையே பாடுவா
ரோதுமிசை கண்டவர்முன் னேடிவந்தோன்--தீதகன்ற
சித்தத்தை யேசிவன்பால் வைத்தோர் தெளிவுகண்டு
நித்தியமா முத்தி நிலைகொடுத்தோன்—வைத்ததிரு
வாரூரி லேபிறந்தா ராடு நிலையறிந்து
தாரூர் சடையுடனே தான்வந்தோன்—பார்மீது

சீரேய்ந்த முப்பொழுதுந் தீண்டுவார் பூசைக்கா
யேரேய்ந்த பாத மினிதளித்தோன்—பேராய்
முழுநீறு பூசு முனிவர்விதிக் கற்பம்
வழுவாநீ றிட்டிடவும் வந்தோ—னழுவாம
லன்பிளைப் பாலுமடி சார்ந்த [வ]டியார்க்குத்
தென்புதர வந்த செழுஞ்சோதி—பொன்பெறவே
பூசல்நா யன்னுளத்திற் பூங்கோயிற் கட்டிலிங்க
நேசப்ர திட்டைசெய நீங்காதோன்—றேசுபெற
வந்தமங்கை யர்க்கரசி மாமனத்தின் பத்தியினாற்
சிந்தைமகிழ் முத்திநிலை செய்கின்றே—னிந்தணிந்தோ
னேசனென வேவந்த நேசநா யன்றனக்கு
[1]வாசமலர்ப் பாத மகிழ்ந்தளித்தோ—னீசனையே
காணுந் திருநீல கண்டபெரும் பாணருக்கே
வேணிமதி காட்டவந்த மெய்ப்பரமன்—பூணு
நசையில்சடை யார்க்கருளே நாட்டினே னென்று
மிசைஞானி யார்க்கருளே யீந்தோன்—பசைதீர்
மனுநீதி சோழனுடை வண்மைகண்டே யென்றும்
பனுநீதி செய்யும் பரமன்—கனிவுதர
வெண்ணிலாப் பேர்க ளிதய மகிழ்ச்சிபெறக்
கண்ணருளே நல்கியின்பக் காட்சிதந்தோ—னண்ணரிய
போக்கும் வரவுமிலான் பொய்யருக்குப் பொய்யானேன்
வாக்குமனத் துக்குமெட்டா மாதேவ—னேக்கரிய
மெய்யருக்கு மெய்யன் விதிமா லறியாத
வைய னனலகிரி யாயினேன்—செய்யும்
விருப்பாம் புலிக்காலன் வேண்டுமத லைக்குத்
திருப்பாற் கடலளித்த செல்வன்—மருப்பிலகு
மாலைவாய்ச் சூகரம்போ யன்றமுத குட்டிக்குப்
பாலைவாய்ப் பெய்த பரமேசன்—ஞாலமதிற்

---

[1]இதன்பின் கோச்செங்கட் சோழரைச் சிறப்பித்தற்குரிய கண்ணி யொன்று இருத்தல்வேண்டும்.

காண வரும்புலவன் கண்டோட வேவிறகைப்
பாணனுக் காகச்சுமந்த பையரவ—னீணிலத்தி
னக்கீரன் றோல்விபெற நாற்கவிவல் லோனெனவே
சொற்கீர மானமொழி சொன்னமுதல்—பொற்பா
நரியைப் பரியாக்கி நற்பாண்டி யன்முன்
தெரிய மறைப்பரிமேற் சென்றோன்—பெருகுவையை
யாற்றை யடைக்க வரியகொட்டுங் கூடையுமாய்ப்
போற்றுமவ்வைக் காளான பொற்சடிலன்—றேற்றமிலாத்
தக்கன் றலையைத் தடிந்துநறு நெய்சமித்தோ
டொக்கவிட்டு வேள்வி யொடுக்கினோ—னிக்குமதன்
றேவி யிரதி திகைத்தழுத நீர்மாற
வாவியுடல் காண வவட்களித்தோன்—பாவலர்சொல்
தத்துவந்தொண் ணூற்றாறுந் தாமுணர்ந்து தன்னையறி
யுத்தமர்க டானான வுண்மையான்—சுற்றுபசுக்
கத்துகன்றைத் தானகலாக் காட்சிபோற் கற்றவர்பாற்
சற்றும் பிசகாத தண்ணளியான்—முற்றுநெஞ்சு
மெஞ்சி யரிபிரம ரேனையரும் வந்தளவி
லஞ்சலென்று நஞ்சையுண்ட வாதிபரன்—விஞ்சுபுகழ்ச்
சீலனைமார்க் கண்டனையே சீறு மதிகோபக்
காலனைக்கா லாலுதைத்த கங்காளன்—காலகஞ்ச
மாயிரத்தி லொன்றுகுறை யாய்கண் மலர்தரித்த
மாயனுக்கோ ராழி வழங்கினோன்—தீயகுண
முப்புரத்தின் மூவருய்ய முற்றுவித்து மற்றனைவோர்
மைப்புரத்தை யேயெரித்த வாணகையான்—கொப்பிரு
காதவர்கற் பிற்றாரு காவனத்தின் மாமுனிவ [க்குங்
ரோதாத் தவமழித்த வொப்பிலான்—பாதியுடல்
கோதி லுமைக்குக் கொடுத்துப்பொன் னம்பலத்தில்
வாதினுக்கா யாடி மகிழ்கின்றோ—னோதவரு
தில்லையினின் மேவுஞ் சிவப்பிரகா ச[ன்]னிசைத்துச்
சொல்லுந் தமிழ்மாலை சூடினோன்—மல்லறரு

## தசாங்கம்

கானமுற்றும் மேவுமலர்க் காரளிகை மாநெருங்கி
வானமுட்டு நந்தி வரையினன்—பானுமுட்டும்
பாரவகிற் குங்குமமும் பல்லாம்பல் வெண்மருப்பி
ஞாமுநீர் மேவியபா லாற்றினன்—சீர்தெளிய
வல்லோர் மிகுசான்றோர் மாதருமஞ் செய்யவரு [ந்து
நல்லோருஞ் சேர்தொண்டை நாட்டினன்—சொல்லோர்
தேடுகின்ற பேர்கற்றோர் சின்மயத்தி னென்றுக
நாடுமுப்பந் தொட்டி நகரினன்—பாடுமளி
தேனைக் குடித்துத் தினந்தோறுங் காம்போதி [ராய்
தானிசைக்குங் கொன்றைமலர்த் தாரினன்—பானிக
மின்னுகின்ற கொய்யுளையும் வெண்பல்லு மாகநல்லோர்
பன்னவரு வேதப் பரியினு—னுன்னுமலஞ்
சாடித் தவமோங்கத் தம்மையுணர்ந் தோர்பவமாங்
காடழிக்கு ஞானக் களிற்றினன்—தேடமார்
தேற வசுரர்பயந் திருமா லென்றென்றுங்
கூறு மிடபக் கொடியினு—னீறணிந்தோர்
சிற்றறிவு போகச் சிவம்பொருளென் றோறிவு
முற்ற வதிரு முரசினன்—கற்றறிந்தார்
சொன்ன மொழிதவறுத் தூயர்வாழ் வாரென்றே
சின்ன முழங்கவுயர் செங்கோலான்—பொன்மணிகள்

## உலாச் சிறப்பு

மொய்த்ததிருக் கோபுரமு முன்னிசைந்த பந்தர்களுஞ்
சித்ரமணி மண்டபமுஞ் சேர்மதிலு—நித்தியமா
மாலயமும் வந்தோர்க ளாடுதீர்த் தக்குளமுங்
கூலமணி வீதிகளிற் கோதிலா—வேலைமிகு
வேதியர்கண் மன்னவர்கண் மேலாங் குலவசியர்
சாதியுயர் வேளாளர் தாமுதலா—யோதவரு

பல்குடியு நாளும் பலதா னியதனமு
மல்கி மிகவும் வளரவே—நல்கவரு
சுந்தரியோர் பாகர் சுருதி மிகவுரைத்து
நந்தலிலா வாழ்சோம நாதனூர்—விந்தைபெறப்
பன்னும் கடல்போலப் பல்லியங்க டாமுழங்க
வுன்னரிய வீதியெங்கு மோங்கவே—முன்னி
யுலாவுதிரு நாளி லொருநா ளெழிலா
நிலாவியசீ ராகமத்தி னேரே—குலாவுகின்ற
தேவர்பிரா னைப்பூசை செய்யமணி மண்டபத்தி
னுவலுட னேவருசிங் காதனத்தி—னுவதனு
லேத்தி யதன்க ணெழுந்தருளப் பண்ணியன்பாய்த்
தேற்றிய பூசையது செய்தபின்பு—போற்றிய
பட்டாடை சாத்திப் பதித்தமணிப் பொன்மகுட
மிட்டுச் சிரசி லிசைந்திருக்கக்—கட்டுமணிப்
பட்டமிட்ட நெற்றியினிற் பாங்கான கத்தூரிப்
பொட்டுமிட்டுக் காந்தி பொலிவுதர—விட்டபச்சைத்
தோடு குழையிற் றுலங்கமணிக் கண்டத்தி
லாடு மணிச்சரங்க ளாங்கசைய—நாடரத்நத்
தோள்வளைய னின்று துலங்க மணிக்கரத்தில்
வாள்வளையும் கங்கணங்கள் வந்திலங்க—நீள்வரியன்
வேங்கையின்றோன் மேலே விளங்கும் வயிரமணி
நீங்கரிய பட்டையிடை நின்றசையத்—தாங்குமணிக்
காலிற் சிலம்பு கனகவெயி லெறிக்கச்
சாலே மகிழுஞ் சமயத்தின்—மாலைமின்னார்
கொண்டை குலுங்கவிரு கொங்கைநின் றேகுலுங்கக்
கண்டசர முத்துவடங் கண்டசையக்—கொண்டகொப்
காதசையச் செம்பதுமக் கைவளைய னின்றசைய [புக்
வோதுபதத் திற்சிலம்பு வுற்றசைய—மாதர்சேறி

மெய்ப்படியே யாடுகின்ற வேளைதனி லேமகிழ்ந்
திப்படியோர் காணரத மேறியே—செப்புகின்ற
விதிதனி லேவரவே மெய்க்கண் மலர்தரித்த
மூதரியேற் றுக்கொடிதான் முன்போத—வூர்திமறை
சொன்னவெள்ளி வேதண்டத் தூய தவளநிற
முன்னோன் மகிழ்விடையு முன்போதப்—பன்னுமறை
பூம னனந்தனிலும் பூங்கம லக்கண்ணன்
காமன் பிதாநற் கருடனிலுந்—தாமமணி
யிந்திரன்வெள் ளானையிலு மேழுவித நாப்படைத்த
சந்த வனலோன் றகர்தனிலும்—பந்தமறுங்
காலன் கயவாய்க் கருமைக் கடாவினிலும்
வால நிருதிநர வாகனத்துங்—கோல
வருணன் மகரத்து மான்கலையின் மீதும்
பொருடனதன் புட்பகத்தும் பூமேற்—கருணைதரு
மீசான தேவ னிடபத்து மாறிரண்டு
தேசு பெறும்பருதித் தேர்மேலுங்—காசுதிக
ழிந்து விமானத்து மீச னுருப்படைத்து
வந்தோ ரிடபத்து மாமுனிவர்—சந்தமிகு
மோரெழுவர் தேர்மேலு மொத்தசித்த சாரணர்கள்
சீரெழுபுட் பங்கொண்டு சேவிப்ப—வேரெழுந்து
கூர்கொண் டிடுமொற்றைக் கொம்பனே ரம்பனுய
ரேர்கொண்ட வாகுவினி லேறிவரப்—பார்கொண்டே
கட்டுமுலை யாரிருவர் காந்தன் மரகதச்சூட்
டிட்டமயின் மீதே யெழுந்தருளப்—பட்டுளதார்
கூந்தலுமம் பார்விழியுங் கொண்ட சவுந்தரியே
ரேந்துமிள வன்னத்தி லேறிவரச்—சாந்தணிந்த
வெண்டா மரைமயிலு மேலா மரம்பையருந்
தண்டா மரைத்திருவுந் தார்ச்சசியும்—வண்டாருந்
தாரூர் வசியுமிசை தான்கொண்ட மேனகையு
வாரூர் முலைநாக மங்கையருஞ்—சீரூர்

மலைகடலி னீரூர்ந்த மங்கையரு மன்று
நிலையா யிருபா னெருங்கி—யலைவிலா
வேடிக்கை யாய்வரவே வெள்ளைக் கொடிகள்பல
ஆடிவர நெட்டி யழகாக—நீடியகால்
சேர்த்து நிரைத்துவந்த திங்க ளனேகமென்னக்
கோத்தமுத்தின் வெள்ளைக் குடைநெருங்க—வேற்றி
வட்டமிட்டுச் செங்கதிரை மாற்றச் சிவந்தினிய [ருந்தி
பட்டாற் சுருட்டி பலநெருங்க—விட்டபொன்னின்
வெண்சா மரையிரட்ட விஞ்சையருக் கொப்பாகப்
பண்பாடு வோரிசைகள் பாடிவரக்—கண்காணும்
வேத வொலிமுழங்க வீராணம் டக்கைகையான்
மோதுமத்த ளாதி முழங்கிவரப்—பாதிமதி
வேணிமுடி யான்வந்தான் மெய்ப்பரம யோகியரி
லாணிக்கை யாயிருக்கு மண்ணல்வந்தான்—பூணுமணி
நாகமணிந் தோன்வந்தா னுடு முபநிடத
வாகமுமாய் நின்ற வரன்வந்தான்—மாகமதி
லுண்டாம் பகிரதியங் குற்றசடை யோன்வந்தான்
கண்டான் மூன்றான கடவுள்வந்தான்—பண்டமரர்
போற்று மலையரையன் பொற்பா மருகன்வந்தான்
கூற்றனைக்கா லாலுதைத்த கூற்றன்வந்தான்—மாற்று
வையன்சோ மேச னருள்தரவந் தானென்று [மில்லா
செய்ய திருச்சின்னஞ் சேவிப்ப—வையமதில்

### குழாங்கள்

மின்னனையா ரெண்ணிலார் வேடிக்கை தான்பார்க்கப்
பொன்னார் பணிகள் புனைந்துகொண்டு—சொன்னநிறச்
சேலை யணிந்துசெழுஞ் சிந்தூரப் பொட்டணிந்து
மாலை குழற்கணிந்து மைதன்னை—நீல
விழிக்கெழுதிச் சிற்றிடைக்கு வேண்டுமரைப் பட்டை
செழித்த வரைஞாணைச் செலுத்திப்—பழிப்பில்லா

வெண்டையம்பொன் னின்சதங்கை வேண்டியகா லுக்க
கொண்ட மகிழ்ச்சியுடன் கூடியே—தண்டாள. [ணிந்து
மெத்தை யதின்மேலு மேவுநிலா முற்றத்துஞ்
சுற்றுமணி மண்டபத்துஞ் சூழுமதிற்—பத்தியிலும்
அங்கங் கிருந்து மளகேசன் றோழனுஞ்
சங்கரனூர் பொற்புகளைத் தான்பார்த்துப்—பொங்கிவரு
மாலாழி மூழ்கும் வகைகண்டு மக்கணமே
காலாழி பூண்டுவருங் கன்னியர்மேல்—மேலாம்வேள்
தென்றற்றே ரேறிச் சிறைக்கிள்ளை பாய்பரியாய்
வென்றிடுங்கண் ணூர்கள் மிகுதளமா—யொன்றிருளே
மும்மதமா தங்கமாய் முன்குயிலெக் காளமா
யம்ம வினையிசைக்க வாரளிகள்—
* * * *
* * * —பன்னுவெள்ளை
மன்னியபூச் சங்கெடுத்து வாயில்வைத் தூதவுமே
பன்னுமலர்ச் சாதி பலவிளக்காச்—சொன்னகடல்
தூரியமாய்க் கேதகையே சுற்று முடைவாளாய்
பாரிற் கரும்பே பருஞ்சிலையாய்—காரியதில்
வண்டா யொருநாலு வாளிதனை யேவிடவே
கண்டார் மனங்கலங்கிக் கண்டசரம்—வெண்டாளம்
பூணூர் புழுகணியார் பூமாலை கொண்டையின்மேற்
காணு வகைசெய்தார் கையதனுல்—காணுமல்
ஆடுங் கழங்குடனே யம்மானை தான்மறந்தார்
நீடுபல் லங்குழிகள் நீத்துவிட்டார்—பாடுகின்ற
கீதமறந் தார்காத்திற் கிள்ளையும்விட் டேயிருந்து
மாதாள வில்லாரில் மற்றொருத்தி—பேதை [நல்லாள்]

பேதை

பொன்போலு மேனியாள் பூங்கோதை கூடும்வகை
மன்கூன் கவரி மயிரசைத்து—மின்சேரும்

மூவகையாய்ப் பின்னி முளைத்த சடைபோல
வாவலுடன் பின்னே யசையவிட்டு—மேவியபொற்
சுட்டி பிறைபருதி சே[ர]திபெற முன்னிலங்கக்
கட்டி நுதலினிலக் காப்பணிந்து—இட்டமுடன்
கண்டசர மாமணிகள் கைவந்தி கைவளையல்
கொண்ட வுடைதாரங் கொலுசு தண்டை—பண்டை
காண விடுமிடங்கள் காந்தி பெறவணிந்து [யோர்
மாணிலங்கு கின்ற மலரடிக்குப்—பூணுநிறச்
செம்பஞ்சை யூட்டித் திருந்துகின்ற பேதையரி
லம்பிரண்டுங் கண்ணுன வாயிழையாள்—கொம்பிருந்து
கூவாமல் வந்தகுயில் கூவிப் பறவாமற்
பாவாணர் சொல்லும் பசுங்கிள்ளை—பூவார்ந்த
மன்ற றிகழு மலரளைந்து பாலுளநீ
ரென்றும் பிரியா விளவன்னம்—நன்றிதிகழ்
திங்கட் கொழுந்து தெவிட்டாத தெள்ளமுத
மிங்கொற்று வந்த விளந்தென்றல்—பங்கமறச்
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் போலவே
யிற்றுப் பிறக்கு மெயிற்றினள்—நத்துபுன
லுட்டா மரையரும்பு வுள்ளாகி யுள்ளிருந்து
மட்டா யிருந்தமுலை மார்பினள்—கட்டழகி
சிற்றி லிழைத்துச் சிறுவியர்க டம்முடனே
யொத்தமொழி பேசி யுவந்திருந்து—நற்றெருவிற்
காந்தண் மலர்நெருப்பாய்க் கல்லே கரியாகச்
சேர்ந்த மணற்சோறு செய்கையிலே—ஆய்ந்தோர்சொல்
தேவாதி தேவன் றிருத்தேர்மேற் செல்லுகையால்
மூவா முதல்வனென்று மூதறிந்தோர்—நாவா
லுரைத்த மொழிதெரியா வொண்ணுதலா ணங்கண்
ணருத்தவிருந் துக்கழைமி னென்பாள்—பருத்தகழை

முத்தெறிந்தா ளுமு முயன்றுமவர் பூச்செண்டை
யொத்தெறியா ரோவுண்மை யோரென்றாள்—மொய்த்தமணி
மார்பெல்லா[ந் த]ங்கு மணக்கோலப் பிள்ளையுடன்
சேரப் பொருத்துமெனச் செப்புவாள்—மார்பில
* * * * *
கட்டி விளையாடுங் கண்மணியே—மட்டிலா
வேத மறியா விமல னுலகனைத்து
மோதவு மெட்டா வொருமுதல்வன்—பேதமிலான்
மெல்லியலே நீபுலம்ப வேண்டா மெனத்தேற்றி
யல்லறீர்[க்] கின்ற வமையத்திற்—சொல்லிடது
பாகம் பிரியாமற் பார்ப்பதியை வைத்தபிரா
னாக மணிசோம நாதனார்—யோக
விரத மவனகன்றே யேக மதனன்
குரகதப்பைங் கிள்ளையிவன் கொண்ட—விரவுதென்றற்
றேரைநிறுத் தாமற் சிலையைக் குழையாமற்
போரின் மலர்க்கணையைப் பூட்டாமற்—பாரில்
நிதம்பவர வல்குலா ளேங்காமற் போந்தா
னிதம்பேதை யக்கிருந்தா ணோராய்ப்—பெதும்பை

## பெதும்பை

திருத்தா மரையிடத்திற் சேர்ந்த மடந்தை
விருப்பா மயிலென்னு மின்னு—ளுருப்படவே
வெற்றிபெற்று மாரன் விளங்கும் பவனிக்குச்
சிற்றிடைத்தே ரான செழுந்தென்றல்—கற்றவர்சொல்
பேறு [புகழ்]மை பெருமை தரும்பெண்மை
மீறி யரும்பவந்த மெய்யினாள்—நாறியபூ
மாலையைங் காமுகனு மாமனம்வண் டாய்விழவே
கோலமுடன் சேர்த்த குழலினாள்—ஞாலமதில்



வஞ்சனைகள் எங்கொலைகள் வந்தசிறு மையறியா
எஞ்சவில் லாத விருகண்ணாள்—மிஞ்சச்
சகமும்வச மாக்கவருந் தாட்டா மரையின்
முகையின்முளை போலு முலையாள்—சுகமார்
வெகுசரச லீலைவித மெல்லியர்கள் சொல்லால்
வகைவகையாய்க் கற்ற மனத்தாள்—நகைமுகமாய்
மெல்லியர்க டம்முடனே மேவுமணிப் பந்தரின்கீழ்
சொல்லும் பலவிதங்க டோன்றவே—குல்லைபுனை
மாறுன் றுதிக்குமடி வண்மை தனைப்பாடிச்
சீறுப் புலியதளின் சீர்பாடி—நீறுார்ந்த
மேனி தனைப்பாடி வீறுங் கரத்தணிந்த
மானையும் பாடி மழுப்பாடி—யாறுார்ந்த
செஞ்சடிலம் பாடிச் செழுமதியம் பூசிக்க
வஞ்சதரன் வந்த வருள்பாடிக்—கொஞ்சுஞ்
சவுந்தரவா லாம்பிகையின் றருள்பாடிச் செங்கை
சிவந்திடவே கந்தபொடிச் சிந்த—வுவந்து
கழங்காடி யேயிருக்குங் காலையினிற் சின்ன
முழங்க வியங்கள் முழங்க—பழங்க
ளிலங்கு கதலி யிடநெருங்குந் தேர்மே
னலங்கொள் புகழ்ச்சோம நாதர்—பலந்தரவே
வந்தா ரவர்தம் மதிமுகத்தின் மாணழகுஞ்
சுந்தரஞ்சே ரும்புயங்கள் தோன்றழகுங்—கந்தமலர்த்
தாரிதழி மின்னித் தயங்குகின்ற மார்பழகும்
வீரகண் டாமணியு மேலழகும்—நேருடனே
கண்டாள் களித்தாள்செங் காவிவிழி யாலழகை
யுண்டாள்பா ராதவர்போ லுத்தமனாா்—பண்டைப்போ
லங்கண்விட் டப்பா லகன்று ரரியமதன்
செங்கையம்பு கொண்டப்பாற் சேர்ந்தனன்பின்—மங்கைதான்

## மங்கை

காமனா லெல்லாங் கரைகாண வேகற்றுத்
தாமரையின் மன்னுந் தனியன்ன—மாமமதிற்
சேலைத் துரத்தித் தி[ட]வேலை யும்பழித்து
நீலத்தை யொத்த நெடுங்கண்ணாள்—மேலொத்த
பாலுந் தெளிதேனும் பாகுங் கொடுத்துமிகு
மாலுந் தரும்பவள வாயினாள்—சாலவே
கொட்டுமெழில் வாரி குமிழிமுத்து மாலையினை
யிட்டுவந்த தென்னு மிளமுலையாள்—மட்டுமலர்க்
கொண்டை யதினாலுங் கொங்கை யிணையாலுந்
தெண்ட னிடவணங்குஞ் சிற்றிடையாள்—பண்டைமதன்
தேரோசொல் லாழியோ செம்பொன்மணித் தட்டோவென்
றாராய்ந்து காமுகர்சொல் லல்குலாள்—போராடும்
காமன்விழாக் காவணத்திற் கட்டுங் கதலியென
வாமமிரண் டான வனப்பினாள்—பூமலர்க்கை
பந்தேந்தி மாதருடன் பாடி யிடைதுவளக்
கொந்துமலர்க் கொண்டைக் குழல்சரியச்—சிந்தூரப்
பொட்டுத் துலங்கப் பொலன்சிறந்த வள்ளையினி
லிட்ட பணிக ளிசைந்தாடக்—கட்டுமணிப்
பொற்சரங்க ளாடப் பொருந்தும் வளர்நீலக்
[1]கற்சரங்க ளாடக் கவினாட—நற்சுரும்பு
சுற்றுந் தொடையாடச் சொன்னமுலைக் கச்சாட
நித்தில மாலை நிறைந்தாடச்—சித்ரமணித்
தோள்வளைய லாடத் துலங்குசரி கற்கடகம்
நீள்விழிகண் டாடவே நின்றாடத்—தாள்விளங்குந்
தண்டை யசையச் சதங்கை கலகலெனக்
கண்டு விளையாடுங் காலையினி—லண்டர்பிரா

---

(பிரதி)—[1]கற்கரங்க.

னத்தி யுரிபோர்த்தோ னம்பலத்தி லாடினேன்
கற்ற விருடியர்க்குந் தண்கருணை—வைத்தவர்கள்
மாதவங்கள் முற்ற வருகின்ற சித்துருவா
ஞாதி பரமான வத்துவித—னேதுமுப்பந்
தோட்டி தனிலமர்ந்த சுத்த சிவானந்தன்
கட்டு மணிக்காலன் கங்காளன்—துட்டச்
சமணர் கழுவேறச் சைவம் விளங்க
விமலமணி நீறும் விளங்கக்—கமலமுகச்
சுந்தரியோர் பாகம்வைத்த சோதியான் சீர்த்தியென்றும்
நந்தலிலா நற்சோம நாதனார்—விந்தைபெறுந்
தேரேறி வந்தவர்தம் செய்ய விதழியந்தார்
வாரேறு பூண்முலைமேல் மன்னவே—காரேற்ற
பூங்குழலே வாங்கிவந்தாற் போர்மதன னுக்கஞ்சே
னீங்கென் றிவள்புகலு மெல்லையினி—லாங்கவன்றே
ரப்பா லகன்றிடவு மாலைமத னன்கணைக்கே
இப்பாலென் செய்வேனென் றேங்கினாள்--செப்புமுலைப்
பெண்பிறந்தா ரெல்லோரும் பேசினதுங் கேளீரோ
கண்பிறந்த காதற் கடப்பரோ—வெண்பிறந்த
சொல்லினாற் றேற்றித் தொடர்ந்துவந்த தோழியர்கள்
மெல்ல வணைத்தறை மேவுகையின்—மல்லாற்
றொடர்ந்த மதனாலுஞ் சோராக் குயிலிற்
கடந்தவிசை யாலுமனங் காணாள்—மடந்தையரின்

## மடந்தை

மற்றொருத்தி நாக மடந்தை யரின்மேலாள்
உற்ற வரம்பையரி லொப்பிலாள்—நத்துவருங்
காரோ வறலோ கறுநீலச் சைவலமோ [றை
தாரோதி யென்னவருந் தாழ்குழலாள்—சீர்கொள்பி
கண்டோர் மனமுருகக் கத்தூரிப் பொட்டணிந்த
துண்டாகி லொப்பான வொண்ணுதலாள்—மண்டமரி

லம்பைத் துரத்திமிக வாசையுள்ளோர் தங்களையே
வம்பாக வாட்டு மலர்க்கண்ணாள்—நம்பினோர்
சோகமுற வெட்பூவுஞ் சோர்குமிழு மேகடுப்ப
மோகங் கொடுக்குமுயர் மூக்கினாள்—நாகமணி
யூட்டியிடு மோலையினை ஞோர்மனமு மொன்றாகக்
காட்டியுஞ்ச லாட்டும்வள்ளைக் காதினாள்—நாட்டுசங்க
மன்னசெழுங் கந்தரத்தா ளான பசுங்கழையி
தென்ன விளங்கு மிருதோளா—ளுன் னுமுல்லை
நீங்க வரி[நர்] நகையா[ள்]வெண் ணித்திலஞ்சேர்
கோங்கை யனையவிரு கொங்கையாள்—பாங்கரிய
நீலமணிப் பொன்னாரம் நீங்காம லேகிடந்த
வாலிலையே யென்னு மணிவயிற்றாள்—மேலாய்ப்
பருவமுயர்ந் தேறும் படியோர் பிரமன்
வரையின் வயிற்றின் வரையா—ளுரைவல்லோர்
பாடியபொற் றேரோன் பகாழி யோவென்று
ஆடவர்நித் தம்புகழு மல்குலாள்—நாடுமும்பற் [தா
றெண்டையையொப் பான தொடையாள் மலர்ப்பதத்
ளொண்டொடியார் சூழ வுடனேறித்-தண்டமிழ்சொன்
மேல்வீட்டின் முன்றில் வெளியனாகிப் பாலாற்றின்
கால்வேட்ட வோடைக் கரைபார்த்து—மால்வேட்ட
[1]குன்றுகள் பார்த்துக் குறுகா வனம்பார்த்து
வென்றி யயற்காடு மேற்பார்த்து—நன்றிதருந்
தண்டா மரைக்குளங்க டானும்பார்த் தல்லிநனை
விண்டதடம் பார்த்து வெளிபார்த்து—வண்டிறந்த
காநக் தனவனங்கள் கண்ணாரத் தான்பார்த்து
ஆனந்த வாரி யருள்பார்த்து—வானத்தை
யெட்டுந் திரைபார்த் திசைகொத் தளம்பார்த்துட்
(:)செட்டுவினை தேர்த்திண் டிறம்பார்த்து—இட்டமுள

(பிரதி)—[1]கன்றுகள்.

கோபுரமு மண்டபமுங் கோவிலுமே தான்பார்த்து
மாபுரத்தின் வீதி வகைபார்த்துத்—தீபம்வளர்
வேதபா ராயணஞ்சொல் வேதியர்கள் வேள்விசெயு
மாதிநூல் வீதி யருட்பார்த்து—மாதவர்கள்
பூசை செயுமிடத்தின் பொற்புகளைத் தான்பார்த்து
வாசமுள வீதி வளம்பார்த்துத்—தேசுவளர்
வேந்தர் முரசதிரும் வீதிகளுந் தான்பார்த்துச்
சாந்தணியும் மங்கையரைத் தான்பார்த்து-மாந்தர்மகிழ்
ஏரார் குபேர னிணையாத் தனம்படைத்த
சீரார் வசியர் தெருப்பார்த்து—ஆராய்ந்த
சற்சூத் திரவீதி தான்பார்த்து மற்றுமுள்ளோ
ரிற்சேரும் வாடை யினைப்பார்த்து—அற்சேருங்
கூந்தலார் தம்முடனே கூடி யிருக்கையிலே
சாந்து புழுகுமணந் தாமோங்க—வேந்துமகிற்
றூபங் கமழச் சுகந்தம் பரிமளிக்கத்
தீப மநேகஞ் சிறந்துவரத்—தாபமக
லாலவட்டம் வீச வரிய குடைநிழற்ற
ஞாலவட்டஞ் சொல்சோம நாதனார்—நீலவட்டத்
தேரேறி வந்த திருக்கண்டாள் செய்யவிதழ்த்
தாரேறு மார்பிதழி தான்கண்டாள்—வாரேறு
பூண்முலையாள் பாகம் பொருந்துமிடங் கண்டாணம்
வாண்முலைமேற் சேர்வதெந்த வாறென்றாள்—வீண்மொழிகள்
பேசுகின்ற வெல்லையினிற் பேரா யிரமுடையான்
றேசுபெறுந் தேருமப்பாற் செல்லவே—வீசுமதன்
கைச்சிலையை வாங்கிக் கணைதொடுத்தா னங்கவட்கு
நச்சிலைவேற் கண்ணீர் நயந்துவிழப்—பொய்ச்சவிடை
தள்ளாடி யேகலைக டாமகலக் கைவளைக
ளுள்ளாடிப் பைந்தொடிக ளுய்த்துவிழ—நள்ளார்போற்
கூவக் குயிலினங்கள் கோளின்மதி தீச்சொரிய
வாளொத்த கண்ணாள் மயங்கையிலே—நாளொத்த

தாய ரெடுத்தணைத்துத் தன்மா ளிகைபுகுந்து
மேயபுத்தி யெல்லா மெடுத்துரைத்துப்—பாய
லொரு[ங்]குவைத்து மெத்தையினி லொக்கவிருத்தித்
தெரியத் தெளியவைத்தாள் செவ்வே—யரிவை

அரிவை

கருமை தருமுகிலுங் காந்திசெறி மின்னுந்
தெரியு மிருசிலையுந் தேனுர்—பெருமைபெறு
மாம்பலுநீ லோற்பலமு மானசிறு வள்ளைகளுங்
கூம்பாத வம்புயமுங் கோத்தமுத்துங்—காம்புகளுந்
தேங்குந் திருவறலுஞ் சேர்ந்தசிறு வாழைகளு
மோங்கியொன் றான வுருவத்தாள்—மாங்குயிலை
யொத்த மொழியா ளுயர்காம னூலையெலாங்
கற்றறிந்து சொல்லுங் கருத்தினள்—முத்தலைசேர்
சூலம் பிடித்தியமன் சுற்றுமற் காமுகரை
யாலஞ்சேர் கண்ணா லடக்குவாள்—கோலமுடன்
செங்கை வளையணிந்து சிந்தூரப் பொட்டுநுதன்
மங்கலஞ்சேர் கூர்விழிக்கு மையெழுதித்—தங்கநிற
மேகலைக ணன்றாய் விளங்கக் கலைசாத்தித்
தாகமுடன் காலுக்குத் தண்டையிட்டுப்—பாகனைய
சொல்லா ருடன்கூடிச் சோதிமணி மண்டபத்தில்
வல்லாருங் கொங்கையாள் வந்தணுகிச்—சொல்லுவாள்
மானே யிளங்குயிலே வல்லியே பெண்ணரசே
தேனே தெவிட்டாத தெள்ளமுதே—நானுரைக்குஞ்
சித்திரங்கள் பாரீர் தெருப்பாரீர் கோயிலுட்
சத்தமது பாரீர் தடம்பாரீர்—நித்தியமாய்க்
கோபுரங்கள் பாரீர் கொடிக்கம்பந் தான்பாரீர்
மாபுரத்தோர் போற்றும் வகைபாரீர்—தீபம்வளர்
நந்தி யிருக்கு நலம்பாரீ ரங்குசஞ்சேர்
தந்தி யிருக்குந் தலம்பாரீர்—கந்தமலர்க்

கூந்தலா டெய்வானை கோலமுள்ள வள்ளியம்மை
காந்தன் மகிழ்கருணைக் கண்பாரீர்—சாந்தமால்
சேரு மிலக்குமியின் சீர்பாரீர் நான்முகத்தோன்
காரிகையாம் பாரதியின் கண்பாரீர்—சேரும்
வயிரவர்தங் கோயிலுடை வண்மை களைப்பாரீர்
செயிரறுதண் ணார்சுதைசேர் திங்க—ளுயரவைத்த
சோமேசர் தாமிருந்த சோதிதனைப் பாரிரென்று
நாமம் புகலவந்து நங்கைதான்—காமமுடன்
றேவிக் கொருபாகஞ் செய்தபிரா னுசையுற்ற
பாவிக்குச் சற்றுங்கண் பாராரோ—நாவிலு
லேத்து மிருடியர்க்கு வென்[னெ]ன வெத்தினவர்[யிற்
காத்தெனக்குக் கண்பார்வை காட்டாரோ—சாற்றுகை
கிள்ளையே யென்றன் கிளேயே யரும்பொருளே
யுள்ள மகிழ்ச்சிதரு மொண்சுகமே—கள்ளமிலா [மே
வென்மனமே கண்ணேயென் னெண்ணநிறை வேறவு
யுன்மனமே யல்லான்மற் றொன்றுண்டோ—நன்மைபெறுஞ்
சோமேசர் மார்பிதழித் தொங்கல்கொணர்ந் தாலெனக்
காமேச னம்பிடுக்கங் காட்டாது—பூமேவுந் [குக்
திங்கள் குளிர்ந்திருக்குந் தீய குயிற்கூவா
தங்கம் பசலைநிற மாகாது—மங்கைமார்
பங்கமுறப் பேசார் பழியார்நம் மன்னையர்க
ளிங்கெனக்குச் செய்வா யெனுஞ்சமயம்—சங்கரனார்
தேரிப்பாற் செல்லத் திகைத்தாள் சிலைமாரன்
பாரிலிக்கு வில்வளைத்துப் பண்சுரும்பை—நாரியெனப்
பூட்டிவிடுத் தான்கணையைப் பொன்னாரந் தான்விடுத்தாள்
பாட்டிசைக்கும் வீணைதனைப் பாரில்வைத்தாள்-கேட்டவன்னை
கட்டி யணைத்துக் கலங்காமன் மாளிகையி
னிட்டமுள தோழி யினையிருத்தி—வட்டமுள
வாலவட்டம் வீசினா ரார்த்தார்முத் தாரவடஞ்
சாலவைத்த[ார்] சாந்தந் தனத்தின்மிசை—சில[ம்]

வரிசையினாற் றோற்றும் வகையா லரிவை
யுரிய மனத்தெளிந்தங் குற்றாள்—தெரிவைமுனம்

## தெரிவை

பாற்கடலி லேபிறந்த பங்கயமா திவ்வழகை
யேற்கவுமே லான வெழிலினாள்—மாற்பெருகு
தேரு மிருஞ்சிலையுஞ் செங்கையம்பு மொன்றான
மாரனையொப் பான வடிவினாள்—பாருலகில்
வண்டேறு தார்புனைந்து வன்புழுகு நள்ளிருளுங்
கொண்டே கறுத்த குழலினாள்—விண்டிலா
மீனைப் புனலில் விடுத்து மிரள்மானைக்
கானிற் றுரத்துமிரு கண்ணினா—ளானையின்றன்
கோட்டைப் பழித்துக் குலுங்காத மேருவமை
குட்டி யிருத்துந் துணைமுலையா—ளொட்டமுட
னீளுமன மும்மடியி னீங்காம னின்றநடை
நாளும் பயிலு நடையினாள்—வாளனைய
கண்ணா ருடன்றனது கையில்வைத்த வீணையினால்
பண்ணா விராகப் பதம்பாடி—மண்ணாள
ராடரங்கு மாளிகையு மாவணநல் வீதிகளு
நாடிமணி மண்டபத்தி னண்ணியே—சேடியர்கள்
சொல்லா லிசையாற் றுணைச்செங் கரம்பிடித்து
மெல்ல விளையாடும் வேளையினிற்—பல்லியங்கள்
நீடாழி போன்முழங்க நித்திலத்தா னீள்கொடிகள்
வாடாப் பரிசை மணிக்குடைகள்—கூடியே
ஓடுங் குதிரை மறைக்க வுயர்தலத்தோர்
நாடும் புகழ்ச்சோம நாதனா—ராடகப்பொற்
றேரையுங்கண் ணாற்கண்டு சிந்தை மகிழ்ந்துமவ
ரேரும் பெருமையுங்கண் டேயிசைப்பாள்—பாரில்விட

முண்ட வழகு முயர்வா ணகையழகுங்
கண்ட நுதலிலகு கண்ணழகு—மண்டர்புகழ்
காதி னழகுமதிற் காணவே சாத்துகின்ற
கோதிலாச் சங்கக் குழையழகு—மோதரிய
மானி னழகு மழுவின் கரத்தழகுந்
தேன்மொழியாள் வாமத்திற் சேரழகுங்—காணின்
கடுக்கைமலர்க் கண்ணியார் காணவணி மார்பி
லடுத்ததங்க மாலை யழகு—முடுத்த
புலியி னதளிறுகப் பொங்கரவின் கச்சை
யலர விறுக்கு மழகுஞ்—சொலவல்லோர்
பாடுங் கமலப் பதத்தா மரையழகு
நாடுமுப்பந் தொட்டிநகர் நல்லழகு—நாடியே
காத லுடனே களித்தா ளவர்மார்பிற்
கோதைதனை வாங்கிவந்தாற் கோதையே--யோதுமனத்
துண்ணே யகலு முயிர்காத்த வாருமென் [ன்
கண்ணே யெனப்புகலுங் காலையினில்—விண்ணவர்கோ
சென்றான் மலர்வாளி தேமாங் குயிற்காளம் [றலுமே
வென்றேனென் றாதவும்வேள் மேல்விடுத்தான்-றென்
சீறுபுலி போல்வரவே திங்க ளனல்வீசக்
கூறு கடன்முரசங் கோடிக்க—வாறுதலை
யில்லாம லன்னையர்க ளேச மிகமெலிந்தாள்
சொல்லாற மாலையப்பாற் றாக்கினு—னல்லார்கள்
வேர்த்தவளைக் கைப்பிடித்து மேன்மா ளிகைபுகுந்து
பார்த்துமிகத் தேற்றிப் பசுங்கிளியே—கீர்த்திபெற
வாரளிப்பார் மாலை யகந்தெளிந்த வெம்மைப்போற்
சீரழிக்கா தேயெனவுந் தேறினள்—பேரிளம்பெண்

## பேரிளம்பெண்

பெண்ணிற் பெருக்கமுள பெண்பெருமாண் மாரனுடன்
வண்ணச்செங்கோ னடத்தும்வல்லமையா—ளெண்கலவி

வித்தை [1]பெறத்திருத்தி மேலாஞ் சுரதவிதம்
பற்றிப் படிக்குப் பழக்கவல்லாள்—வெற்றிபெற
மின்னும் பிறையணிந்த வேணிக்கு வேணுமென்றாற்
பின்னு[2]முள தென்ற பிறைநுதலாள்—பன்னரிய
கைம்மானை வென்று கருநஞ் சுடன்பழகி
மைம்மா னிதென்ற மலர்க்கண்ணாள்—செம்மான
வேணியரன் கண்டத்தின் மேலாலம்போ னானங்
காண வணிந்த கழுத்தினாள்—கோணுகம்பங்
கட்டுண்ட மாதங்கங் காணத் தனந்தினையே
முட்டக் குனிந்த முறைபோல—வட்டமணிக்
கச்சதனாற் கட்டக் கரைந்து தலைகுனிந்து
மெச்சுதர மீது விழுமுலையா—ளிச்சையுட
னாலல் படவக்கை யன்றணிந் தார....
மாலை விளங்குதிரு மார்பினாள்—காலுழுவைத்
தோலை யரையதனிற் சுற்றினவர் போற்சித்ரச்
சேலை யணிந்தவரிச் சிற்றிடையாள்—காலின்மணி
கட்டு மான்போலக் கண்டை, தண்டை பொற்சதங்கை
யிட்ட கமல விருபதத்தாள்—விட்டமத
வானை வணங்கிடவு மாலமமு தாயிடவு
மீன கடற்கன் மிதந்திடவு—மூனமுற்ற
நீற்றறைநீ ராயிடவு நித்தனையே பாடுமவர்
மாற்றரிய சொல்லு மனத்திலுன்னித்—தேற்றிக்
கரட மதகரிமேற் காணவெள்ளி யான [வுள்ளி
வரையினிற்சென் றோருரையும் வாழ்த்தித்—தெரிய
யோடவைகை யாற்றினெதி ரோடத்தே வாரத்தி
னேடு விடுத்தவர்சொல் லின்னுரையும்—நாடியுன்னிப்
பாண்டியன்முன் னேநரியைப் பாய்பரியா கக்கொடுத்து
நீண்ட புகழ்படைத்தோர் நீளுரையும்—வேண்டி

(பிரதி)—[1]யெறத்திக்கி. [2]முனறனறபொ.

யிதுவே பொருளென வெண்ணித் தினமு
மதியே விளங்கு மனத்தா—டுதிசெய்முன்னாள்
பத்தி லொருபிரமன் பாவி யெனுந்தக்கன்
முற்றுமொரு திங்களுக்கு மூவொன்பான்—சித்ரமணிப்
பெண்களையே நல்கவந்தப் பெண்ணி லதிரூபத்
தண்களையாம் ரோகிணியுஞ் சார்வாக—விண்பிறழுஞ்
சித்திரையு மன்பாகச் சித்தத்தி லேநினைத்த
புத்தியினான் மற்றோர் புழுங்கியே—யுற்றிருக்குந்
தந்தையுட னேயுரைக்கத் தான்கோப மாகியந்த
விந்துவினை யப்போ விழைந்தழைத்துப்—பந்தமுற
நல்லாரை யாமளித்தா னாடி யவரவரைப்
புல்லா வகையென் புகலுமெனச்—சொல்லார்ந்த
வென்னழகுக் கொப்பான வேந்திழையே யல்லாமற்
பன்னுமற்றோர் தம்மையுநான் பாரேனென்—றின்னல்
வாயாரச் சொன்னளவில் மாறுபா டாய்த்தக்கன் [பெற
றீயான கோபந் திரண்டுதான்—பாயவே
சாபம் பிடியென்னச் சார்ந்த சவிமழுங்கக்
கோப மிகுந்து கொடுத்தளவிற்—சோபமுடன்
சற்றுசற்று யோனிக டான்மழுங்க மால்பிரம
ருற்ற மகவா னுடன்றேவர்—பெற்ற
பதிபுகுந் திச்சாபம் பற்றவே யிப்போ
துதிபெறவே யீயுமென்று சொல்ல—மதிமயங்கித்
தக்கனார் தானிட்ட சாபந் தொலைத்திடநாம்
மிக்கவர லோமென்ற வேளையினில்—தக்கமொழி
நாரதனார் சொல்ல நவின்றமொழி யின்படியே
வாரிதனைச் செஞ்சடைமேல் வைத்தபிரான்—சீர்திகழ
நாமம் பலபுகன்றா னன்மைசெய்ய மூவுலகில்
ஏமநிதி நின்னையல்லா லில்லையெனப்—பூமலியும்
வேணி யரன்சாபம் வீழ வருள்செய்தான்
வாணிலவும் பேர வளர்ந்தானே—நீணிலத்தில்

பூமிதிருத் தேராய்ப் புகன்றமதி வெம்பருதி
நேமியாய்த் தேவர் நிரைகாலாய்—மீமா[ன்]
கொடுங்கையா[ன்] மேரு குழைவில்லாய் நாணி
யிடுஞ்சேட னாகி யிசைய—விடுங்கணையு
மாலாய்ச் சமர்க்களத்தில் வந்தபொழு தங்கவர்கண்
மேலாய் நினைத்த விதங்கண்டு—சாலவே
முப்புரத்தை வெண்ணகையின் மூளுங் கனலாலே
மைப்பறவே யன்றெரித்த மாதேவ—ரிப்புவியி
லொண்ணா யிரம்பே ரிருட்டாரு காவனத்திற்
பண்ணார் மொழியார் [1]பலிதரப்பின்—நண்ணியே
கேள்வியொரு மந்திரத்தாற் கிட்டியநெய் யாற்சமித்தால்
வேள்விசெய் தாரந்த வேள்வியினிற்—சூழிமத
வெங்களிறுண் டாகவதை மெய்ப்பொருளாய் வேதாந்த
சங்கரன்பா லேவவதைத் தானிடிக்க—வங்கவர்கண்
மானைவிடுத் தாரதனை வன்கரத்தி னாற்பிடித்தார்
கான மழுவைக் கரத்தணிந்தா—ரானபின்
பாங்கவர்தம் வேள்வி யழிக்கவொரு வேடங்கொண்
டேங்கி யவர்க ளிளைக்கவே—பூங்குழலார்
கண்டு மயங்கக் கலைசோர வங்கவர்க
ளொண்டொடிக[ள்] சோர வுலாவவே—பண்டாங்கு
வீதியில்வந் தாரவர்கண் மெய்கலங்கி நாணழிந்து
வோதுமயல் கொண்டங் குடன்றொடர்ந்தார்—வேதனுடைத்
தந்தையைப்பெண் ணாக்கித் தவத்தை யழியுமென
வந்தார் தவத்தார் மயங்கினா—ரிந்தவகை
யாலேதம் வேள்வி யலைந்து மவமானார்
வேலேந்து கையான் விளங்கவே—மாலேந்தப்
பெற்றான் றனக்கிளையாள் பேசவல்லா ரெக்கலையுங்
கற்றான்பின் செல்லுங் கருணைவள்ள—லுற்றான்கண்

(பிரதி)—[1]பலிறறதபபி.

415 மேவு திருப்பாடி வீற்றிருக்குஞ் சுந்தரியா
ராவலுடன் வாமத் தமர்ந்தபிரா—னுவலர்சொ
னற்சோம நாதர் நயந்ததிருத் தேர்கண்டு
விற்சேர் கலைநெகிழ மின்ளுருடிகண்—முற்சோர
நின்று கலங்கிவரும் [ெ]நட்டுயிர்ப்பி னுலவளும்
வென்ற பலசொல் விளம்புவாள்—கன்றுமான்
சேரப் பிடித்தீர் திரும்பவொரு மான்செங்கை
யாரைப் பிடித்தாலங் காகாதோ—நீருமைக்குப்
பாகங் கொடுத்தீர் பணியுமொரு பாவைக்கோர்
பாகங் கொடுத்தாற் பழிப்புண்டோ—வாகுவினிற்
420 சேரு மிதழியந்தார் சிந்தை மகிழ்ந்தெனக்குத்
தாருமுமைக் கட்டித் தழுவினு—லாரினித்தான்
தள்ளுவார் தேருடனீர் தாமப்பாற் சென்றக்கா
லுள்ளமட லூர வுளமகிழ்ந்தேன்—வள்ளையெனுங்
காதார்போ னுன்விடேன் கண்ட திருநீறும்
போதார மார்பும் புயத்தழகுங்—காதலுட
னேத்து மவர்கிடீ ரென்றென்று மென்றுசொல்விற்
றேற்றுமவ ளாசை தெளிந்திடவே—போற்றியே
பார்த்தாள் மனமுருகப் பண்ணி யினியென்கை
வேற்றுள்போற் சென்றேகி விட்டனர்கா—ணேத்தரிய
425 மின்னு ரிவரெழுவர் மேலும் மயலாகப்
பொன்னு ரிதழியந்தார் பூணுவா—ரெங்காளுந்
திங்களன் பாய்ப்பூசை செய்முப் பதப்புரத்திற்
பொங்கிநிதி மல்கவரும் பொற்சடையா—ரெங்கு
நிறைந்தபிரா னன்பரிட நீங்காம லென்று
முறைந்தபிரான் வந்தா னுலா.

முப்பந்தோட்டியுலா முற்றும்.

[குறிப்பு :—முப்பந்தொட்டி என்பது தொண்டை நாட்டில் ஆர்க்காடென (ஆறுகாடு) வழங்கும் நகரின் ஒரு பகுதியாகப் பாலாற்றங்கரையில் உள்ளதொரு சிவதலம்.

வசிட்டர் இராமபிரானுக்குத் தத்துவமசிமகாவாக்கியப் பொருளையுபதேசித்த தலமாகையால் முப்பதப்புரம் எனவும், வீரசம்புவராய

னென்னும் அரசன் ஆட்சிபுரிந்த காலத்தில் இந்நகரை வடக்கே இருந்து படையெடுத்து வந்த யாதவராயன் என்பவன் ஆறுண்டு முற்றுகையிட, வீரசம்புவன் படையழிந்து வருந்தி, பின் காளபயிரவராலால் தனியே நின்று யாதவனை ஓட்டி வெற்றிபெற்றமையால் அழிபடை தாங்கி என்றும், சந்திரன் பூசித்துச் சாபம் நீங்கிய தலமாகையால் சோமநாதபுர மென்றும், வேறு பல பெயர்களும் இத்தலத்திற்கு வழங்கும். விஜயநகராவாசரான கிருஷ்ணதேவராயருடைய பட்டமகிஷி கொண்டம்மா, இராமபத்திர தீட்சிதர் வேங்கடபதி தீட்சிதரென்ற பெரியார் இருவர் விருப்பத்திற்கிணங்க, இந்நகரில் அக்கிராகாரப் பிரதிஷ்டை செய்வித்த செய்தி பழைய குறிப்பொன்றால் அறியக் கிடக்கின்றது.

இத்தலத்திற் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள சிவபிரான் திருநாமம் சோமநாதர்; அம்பிகை பெயர் சௌந்தரவாலாம்பிகை.

இப்பிரபந்தத்தை இயற்றியவர் சிதம்பரத்தில் வாழ்ந்த சிவப்பிரகாசரென்பது இவ்வுலாவின் 148-ம் கண்ணியால் உய்த்துணரத்தகும். இவர் வீரசைவ மதத்தினர். அரும்பொருள் விளக்க நிகண்டைச் செய்த அருமருந்த தேசிகரின் பிதாவாக இவர் இருத்தல் கூடும். அங்ஙனமாயின் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இவர் வாழ்ந்தவராவர். இவரைப்பற்றிய பிறசெய்திகள் விளங்கவில்லை.

இந்நூற் கையெழுத்துப் பிரதியொன்று, அரசாங்கத் தொன்னூல் நிலயத்தில் படிக்க வியலாமல் எழுத்துக்கள் மறைந்து பழுதுபட்ட நிலையிலிருந்ததைக் கண்டு பிரதியழிவுறா வண்ணம் காப்பதே தக்கதெனக் கருதி, சில நண்பர்களின் நன்முயற்சியால் இந்நூல் வெளியிடப்படுகின்றது. அந்நண்பர்கட்குச் சமாஜத்தின் நன்றி பெரிதும் உரித்து.]

## யாகத்தில் உயிர்ப்பலி

[பத்திராசிரியர்]

கும்பகோணத்திலும் கடலாடியிலும் நடைபெற்ற யாகங்களில் நிகழ்ந்த உயிர்ப்பலியை நமது சமாஜம் பலமாகக் கண்டிக்கிறது. 'அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன் - உயிர்செகுத் துண்ணாமை நன்று' என்ற தமிழ் வேதவாக்கு சைவ சமயத்துக்கு முற்றிலும் உடன்பாடு.